11th February 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The answer is placed on the table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : ஐந்து மாதங்களுக்கு முன்னதாக இதே போன்ற ஒரு கேள்விக்கு பதில் அளிக்கும்போதும் உருளைக் கிழங்குகளை அந்நிய நாடுகளிலிருந்து தருவிக்க வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன என்று இதே போன்ற பதில் தான் கொடுக்கப்பட்டுள்ளது. அதே பதில் தான் இப்பொழுதும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனால் இதற்கு இவ்வளவு காலதாமதம் ஏன் என்பதை அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்நிய நாட்டு செலாவணிதான் இதற்கு முக்கிய இடையூறாக இருக்கிறது. அதை சமாளித்துவிட்டு அதன் பிறகு அந்நிய நாட்டிலிருந்து விதைகளை வரவழைக்கவேண்டிய கவனம் செலுத்தப்பட்டுவருகிறது.

SRI K. SATTANATHA KARAYALAR : அந்நிய நாட்டு செலாவணியினால் இதற்கு காலதாமதம் ஏற்படுகிறது என்று சொல்லுகிறபடியால் இதை வரவழைப்பதற்கு முதல் இடம் கொடுக்க ஏதாவது நடவடிக்கை எடுக்கப்படுமா ? அதற்கு எவ்வளவு காலமாகும் என்பதையும் சொல்ல முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு போதிய இடமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. வற்புறுத்தப்பட்டும் இருக்கிறது. எப்படியும் இதைப் பெறலாம் என்ற நம்பிக்கையுடன் இந்த அரசாங்கம் இருக்கிறது.

SRI J. MATHA GOWDER : இப்பொழுது அதிகப்படியாக எட்டு விதைப் பண்ணைகள் ஆரம்பிக்கப்போவதாகச் சொல்லப்படுகிறது. அப்படி எப்பொழுது ஆரம்பிக்கப்படும் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றி பூர்வாங்க பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறது. இது முடிந்ததும் அது எடுத்துக் கொள்ளப்படும்.

*Baby food*

* 203 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : }
SRI N. K. PALANISAMI : } Will the
SRI A. A. RASHEED : }

Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government are aware that Ovaltine, Horlicks, and other Baby Foods are not available in the market at control rates; and

(*b*) if so, what steps have been taken in the matter?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. A. RASHEED : In view of the shortage of milk foods and baby foods, have the Government recommended to the Union Government an increased import of these foods?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir. Government have not made any such approach.

---

* Printed as Appendix I on page 146 infra.

[11th February 1959

SRI K. VINAYAKAM : Are the Government aware that there are very good substitutes for these baby foods, e.g., Alvitone for Ovaltine which is very nourishing and comparatively cheaper? What steps have been taken to encourage such indigenous products?

MR. SPEAKER : The hon. Member will be well-advised not to mention the names of particular products. He can make reference in a general way and not mention anything with a view to boosting particular products.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : This question has answered the previous question of the other hon. Member.

SRI S. LAZAR : இப்படிப்பட்ட உணவுப் பொருள்களை நமது மாகாணத்தில் உற்பத்தி செய்யும் நோக்கம் ஏதாவது அரசாங்கத்திற்கு இருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இங்கேயே இப்படிப்பட்ட உணவு பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டுமென்ற நோக்கம் அரசாங்கத்திற்கு இருக்கிறது. அதைப் பற்றி பரிசீலனையும் செய்யப்பட்டு வருகிறது.

SRI N. K. PALANISAMI : ஏற்கெனவே உள்ள விலைக்கு அதிகப்படியாக 25 சத விகிதம் அதிக லாபம் வைத்து விற்கலாம் என்று சர்க்கார் உத்தரவு போட்டும் அதன்படி இது வரையிலும் இந்தக் குழந்தைகளுடைய உணவு பொருள்கள் சாதாரணமாகக் கிடைப்பதாக இல்லை என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி இல்லை. அரசாங்கத்தினிடம் இருக்கும் தகவலின்படி அவ்விதம் விற்க வேண்டும் என்று உத்தரவு போட்டு அப்படி விற்கிறவர்களுக்குத்தான் லைசென்சு கொடுக்கப்படும் என்று சொல்லப்பட்டது. இதைப் பற்றி கலெக்டர் அவ்வப்போது அங்கங்கே மேற்பார்வை பார்க்க வேண்டும். அவ்வப்போது இதைப்பற்றி பரிசீலனை செய்ய வேண்டும், அப்படி விற்காவிட்டால் லைசென்சு ரத்து செய்யப்பட வேண்டும் என்று ஒப்பந்தம் செய்து கொண்டதன் பேரில் அப்படியே விற்று வருகிறார்கள். அதன் பிறகு விலை குறைந்து தான் இருக்கிறது.

SRI J. MATHA GOWDER : குழந்தைகளின் உணவு பொருள்களில் ஒன்றாகிய கொக்கோ நீலகிரி மலையில் நல்ல விதமாக பயிராகிறது என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அதனால் அங்கே குழந்தைகளின் உணவு பொருள்களை உற்பத்தி செய்யவும் இதை அதிகமாக பயிரிடவும் அரசாங்கம் முன் வருமா ?

MR. SPEAKER : இந்தக் கேள்வி மூல கேள்விக்கு சம்பந்தப் பட்டது இல்லை. அடுத்த கேள்வி.

*Railway Line to Dhanushkodi via Aranthangi—Karaikudi.*

*204 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

அரந்தாங்கி-காரைக்குடி மார்க்கமாக தனுஷ்கோடிக்கு ரயில் போக்குவரத்து விரைவில் ஏற்படுத்த திட்டம் ஏதேனும் இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பியுள்ளதா ?

THE HON. SRI M BHAKTAVATSALAM : No, Sir.

SRI A. VEDARATHNAM : முஸ்லீம் யாத்ரா ஸ்தலமும், கிறிஸ்தவ யாத்ரா ஸ்தலமுமாகிய வேளாங்கன்னியும், இன்னும் ஏராளமான ஹிந்து யாத்ரா ஸ்தலங்களும் தஞ்சை ஜில்லாப்பகுதிகளில் இருக்கின்றன என்ற காரணத்தாலும், அங்கே மாதந்தோறும் திருவிழாக்கள் நடைபெறுவ